உ

முருகன் துணை

# திருச்செந்தூர்

# மும்மணிக்கோவை.

திருநெல்வேலி ஜில்லா

ஆற்றார் ஸ்ரீமான் திருச்சிற்றம்பலம்பிள்ளையவர்களின்

குமாரர்

தலைவன்கோட்டை ஜமீன் மானேஜர்

கௌமாரபக்தி

**A. T. இராமலிங்கம்பிள்ளையவர்களால்**

இயற்றப்பட்டு

தில்லைவிளாகம்

ஆனந்தஷண்முகசரணாலயசுவாமிகள்

விரும்பியவாறு

தென்காசி

[illegible]விலாசம் பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது

இரண்டாம் பதிப்பு

1917

உ

முருகன்துணை

# திருச்செந்தூர்

# மும்மணிக்கோவை.




திருநெல்வேலி ஜில்லா

ஆழ்வார் ஸ்ரீமான் திருச்சிற்றம்பலம்பிள்ளையவர்களின்

குமாரர்

தலைவன்கோட்டை ஜமீன் மானேஜர்

கௌமாரபக்தி

**A. T. இராமலிங்கம்பிள்ளையவர்களால்**

இயற்றப்பட்டு

தில்லைவிளாகம்

ஆனந்தஷண்முகசரணாலயசுவாமிகள்

விரும்பியவாறு


தென்காசி

கோமதி விலாசம் பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது

இரண்டாம் பதிப்பு

1917

உ

முருகன் துணை

# முகவுரை.

இந்நூல் முருகபிரானின் திருவருள்கொண்டு இயற்றப்பட்டு 1904-ம்வருஷத்தில் உறையூர் சைவசித்தாந்த சபையாரால் மதுரை தமிழ்ச்சங்கத்துவித்துவான் சித்தாந்த சரபம் அஷ்டாவதானம் பூவை—கலியாணசுந்தரமுதலியாரவர்கள் முதலான பற்பல பிரபல வித்துவான்களுடைய சாத்துக்கவிகளுடன் சென்னை "பண்டித மித்திர" பிரஸில் முதலாவது பதிப்பாக பதிப்பிக்கப்பட்ட பிரதி களனைத்தும் செலவாய் விட்டபடியாலும் அனேகர்க ளின்னும் ஒருமுறை பதிப்பிக்கவேணுமென விரும்புவதில் தில்லைவிளாகம் ஆனந்தசண்முகசரணாலய சுவாமிகளவர்களுக்கு முருகபிரானிடத் தமைந்துகிடக்கும் பக்திமேலீட்டால் மிகுந்து விரும்பியவாறு இரண்டாம்பதிப்பாகதற்சமயம் 1000காப்பி பதிப்பிக்கப்பெற்றது

**A. T. R.**

நூலாக்கியோன்

## சாற்றுக்கவிகள்

ஊற்றுமலைச் சமஸ்தான வித்துவான்

# கோட்டையூர் சு. கந்தசாமிப்புலவரவர்கள்

இயற்றியவை.

திங்களணி பிரானருளாற் பாணினியும் பொதியச்
சிலைமுனியு மந்நாளிற் செய்தவட கலையு
மங்களமாந் தென்கலையுஞ் சமமெனினு முகை
வாய்பேச முதலையுண்ட மதலைவா வென்பு
நங்கையதாய்ச் செய்துயர்வு பெற்றநறுந் தமிழை
நமரெனவந் தோரெல்லா நன்குலக மதிக்கப்
புங்கமலி போதம்விளங்கக் கற்ப தரிது
போதமது நனிவிளங்கப் புகழ்மிகக் கற்றாலும் (க)

பாடுகின்ற தரிதுகவி பாடினுமே யஃதைப்
பண்ணோடு சொலலரிது சொலினுமப்பாப் பொருளைக்
கூடுகின்ற பாமரரும் வியப்பவிரித் தெடுத்துக்
குவிரமுத தாரையெனக் கூறலரி தவையி
லாடுகின்ற திருவடியை நினைந்துருகு மன்பு
மடியார்பத்தியும் வாய்ப்ப தரிதினுமிக்கரிது

நாடுகின்ற விவையாவு மொருங்கமைந்த நிதிபோ
லெண்ணியபுண் ணியமகிபன் கெண்ணிய மெய்யாற்றூர். (௨)

தன்னிலுயர் கங்கைகுலத் தவதரித்தோன் வாய்மை
தயைமுதற்சற் குணமமைந்தோன் றக்கதிருச் செந்தூர்
மன்னியதண் கடலருகில் வளர்கருணைக் கடலாம்
வடிவேலெம் முருகனிரு மலரடியை மறவா
துன்னியு பாசனைபுரியு முயர்தகவா லுலகி
லொப்பிலமு தெனப்பலநூல் செப்பிய நாவலவ
னின்னியம மார்கலையா பீசு முதலாய
விடங்கடோறும் பிரபலமாயினிதுறநன் கோங்கி, (௩)

விசயதலை வன்கோட்டை ரிசிவரென வந்தோன்
மேன்மைய னிராமலிங்க பூமனவ்வே லவன்மேற்
தசவாண்டின் முன்னியற்றிப் பூவையில ட்டாவ
தானங்கல் யாணசுந்தரக் கவிஞன் முதலோ
ரிசைபல சாத்துக்கவிக ளுடனேறன் கச்சிட்
டெங்கும்விளங் கியமும்ம ணிக்கோவை யெனுநூ
லசைவறு மன்பினர் விருப்பின் வண்ணமிரண்டாவ
தச்சுக்கு வரவுங்கண் டதிவியப்புற் றேமால். (முற்றிற்று)



உ

# திருச்செந்தூர் மும்மணிக்கோவை

## காப்பு.

### நேரிசைவெண்பா.

கார்படியு மாடக் கடிமதிலார் செந்தூரிற்
றூர்படியு மொய்ம்பாருஞ் சண்முகனூ—சீர்படியு
மும்மணிக் கோவைக்கு முந்துதுணை தந்திமுகன்
செம்மணியார் பாதச் சிலம்பு.




### நிலமண்டிலவாசிரியப்பா.

திங்களார் வேணிச் சங்கரன் றேவி
யெங்களார் நெஞ்சந் தங்கியே நாளுந்
தாயினு மிக்க தயாவுட னளிக்கு
நாயகி யெந்தாய் கபமுறு மடிமேற்

நீங்கியே பாதக் கிண்கிணி தயங்க
விங்கித மொழியே பொங்கிப் வாயாற்
பச்சை நரம்பே மெய்ச்சார்ந் தோடுங்
கச்சார் கொங்கை பிச்சை கவ்விப்
பரிகிடு குமா ரியல்வழி நில்லா
துண்ணு முலைபொற் கிண்ணத் தாக்கி
வார்த்திடு மமுதமேற்றுணு மிளையோன்
கருமுகி றவமுந் திருவார் பண்ணை
யுருகியே பாடுங் குருகார் சோலை
யார்ந்திடுஞ் செந்தூர் தேர்ந்திடுங் கோயிற்
சேர்ந்திடு மெம்மையா டெய்வந்தானே. (க)

நேரிசை வெண்பா

தானேவந் தன்புடையார் தங்கவலை தீர்த்தருள்வான்
ஞானேகஞ் செந்தூர்சேர் சண்முகனு— மேனோநீ
துன்புறுத னெஞ்சே துதியாயெம் வேலவனை
யின்புறலா மிங்கே யிருந்து. (உ)

## கட்டளைக்கலித்துறை

இருந்தது போலிருந் திங்ஙோ மென்பது மின்றியுயிர்
கரந்திடு மம்மவப் போதெம தூதர் கயிறுகொண்டே
விருந்தயில் வோரில் விரைகுவ ரந்நாள் விடியுமுனே
பொருந்திய செந்தூரிற் கந்தனைச் சேவித்துப் போற்றுவனே

## நிலமண்டிலவாசிரியப்பா.

போற்றுறு மிறையே சாற்றிய கவிக்கு
நீற்றொளி படரு மாற்றரும் வன்னி
நெற்றியங் கண்முன் பற்றிய போதுங்
குற்றமென் றம்மா வெற்றுரை புரிந்த
நற்றவப் புலவ னுற்றதோர் பொய்கைக்
கரைச்சார் பிருந்து கற்றையஞ் சடையான்
டரையாள் பங்கன் மரையார் பாதத்
தன்புடன் பூசை இன்புடன் புரிநாண்
முன்புரி வினையின் றன்பய ஞகை
வக்கரை மீதே நிற்குமோர் தருவின்

மிக்குயர் கிளையிற் றிக்கென வீழ்ந்த
பச்சிலை யொன்றுமால் விச்சையி தென்ன
வொருபாற் புள்ளாய்க் கரைவா ழுயிரு
மொருபாற் புனலார்ந் துறைதருங் கயலு
மாகவோ ருடலே யிருவகை யுயிர்கள்
பாகமாய்த் தாங்கு மாகமாய் மாறி
யிலையார் பொய்கைப் புனலிடை யொன்றும்
நிலையார் புனல்சூழ் நிலனிடை யொன்றும்
படர்வது கருதி யுடல்கொடு பொருதே
யிடரது பெருக நடைதரு சமைய
மண்டையி லிருந்தே கண்டவ னாகைக்
கொண்டதோர் பூசைக் கிரண்டகஞ் செய்தா
னென்னுமோர் குற்ற மேற்றியப் புலவன்
றன்னையோர் பூதஞ் சார்குகை யதனிற்
சிறையிடப் புலவன் றெளிகில னாகி
மறைமுதற் பொருளைச் சிறையன முகைத்த
பிரமற் கருளிய சரவண பவனாங்
கரமெனு மலையே தரளம தள்ளிச்

சிந்துஞ் செந்தூர்ச் சேவக னல்லாற்
பந்தஞ் செய்யு மிந்தவென் னல்ல
நீர்ப்பா ரொருவற் பார்ப்பேன் கொல்லோ
காப்பான் கந்தன் தரப்பா யென்றே
செந்தமிழ் கொண்டே பைந்தொடை சூட்ட
வந்தமி லழகார் சந்தமார் தாளிற்
கொண்டருள் புரிந்தக்குகைநின் றவனே
மீட்டிய பொன்னர் வேலவ னருளே
யீட்டுதல் பொருளாய் நாட்டமுற்றேனே. (௪)

நேரிசை வெண்பா.

நாடிபு ந டார்த்தமெனு நான்கினுண்மே லானபத
வீடுபெற றிண்ணமென்பார் மேலாவா—ராடுமயின்
மந்தாரங் காட்ட மழைமகிழ்ந்தார் செந்தூரிற்
கந்தாவுன் சேவடியைக் கண்டு. (௫)

## கட்டளைக்கலித்துறை

கண்டுநல் விடுறப் பாதார விந்தங் கருதிமலர்
கொண்டுகை கூப்பியே மெய்யடி யார்தினங் கூடுசெந்தூர்த்
தண்டுழாய் மார்பனஞ் சாரங்க பாணி தனிமருகா
வண்டுபண்கொண்டவுன்செந்தாமரைப்பதம் வாழ்த்துவனே.

## நேரிசையாசிரியப்பா.

வாழ்தருஞ் சைவக் சூழ்தழைத் தோங்கத்
தாழ்தரு மமண்வேர் வீழுறு வண்ணம்
நாடார் காணக் கூடா நாதன்
தோடார் காத னேடாரு கொன்றை
பீடார் வேணி சூடாதி யெந்தை
மாடா ரன்பர் வாடார் போற்றும்
பீடார் சிகரக் கோடாலி கொண்டு
வீட்டியே மேலும் போட்டியா யன்னூர்
பாட்டுக டியில் வாட்டியும் வைகை
யோடுறு புனறன் னேடெதிர் செல்லப்

பாடிய புலவ னீடிய செந்தூர்
வேலவ னென்றே மேதினி விளம்பல்
சாலவு மெய்யே போலு மஃதின்றே
லேலவார் குழலி பால்கொடே யன்னன்
ரூடுடைய செவியெனப் பாடிய வந்நாள்
பீடுறு மெல்லடி வாடுறப் பிரம
புரமது குறுக வெலவன்கொல்
குரவணி குமர குருபர குகனே. (எ)

நேரிசைவெண்பா.

குகனீடு வே லுதவுங் கொற்றமெமக் குண்டாம்
பகவேடறு மந்தகனே பாராய்—சுகமெலாஞ்
சென் றுநின்றங் காடியவச் செந்தூரான் சேவடிக்கே
யென் றுமிங் காட்பட்டே மிசைந்து. (அ)

கட்டளைக்கலித்துறை.

இசைந்துமுன் பார்தெரிந் தீன்றவன் றந்த விழையிருப்ப
விசைந்துபசுந் தேயெனுங் கோட்டுயர் மாமுலை யேந்திளையா

டசைந்ததண் கைகொடு வந்தனைக் கட்டித் தழுவியதென்
னசைந்திடுந் தும்பிசெந் தூராபக் கான்புரி யச்சமன்றே. (கூ)

### நிலமண்டிலவாசிரியப்பா.

அன்றியும் பேடு மொன்றிய பாங்கா
யென்றன தருளார் பொன்றிரு வடியைப்
பெறுமேவன் செந்தூர்த் துறைவா யுறைவா
யிறைவா வெள்ளைப் பிறையார் வேணிப்
பெருமா னருளால் வருமா முருகா
வுமையாய் மறையின் பொருளார் வாயா
லென் றனைப் பல்காற் சென் றுநீ யாடுங்
குன்றுமோதா ரேடி யென்றுநர்ன் ரெழுவேன்
றலைவிதன் பதியை வலியவே யணைய
விலைவிதி யென்னு முலகமிங் கம்மா
நீதிநான் வேதத் தாதியாம் பொருளை
யோதிய வுனக்கே யோதுதன் முறையோ
யாதலா னீயே நீதறக் கூடிப்

பேதியா தென்னைப்பா துகாத் தருள்வாய்
பங்கய முகத்து மங்கைமார் மார்பிற்
கொங்கையோ வென்னத் தெங்கின் வாயுச்சி
தொங்குதீங் கனிமேற் பொங்கிய வவாவால்
மந்திபாய்ந் தோடுங் கந்தமார் சோலை
சொந்தமாய்க் கொண்ட செந்தூர்த் தேவே. (௰)

நேரிசைவெண்பா.

தேவாவென் றுன்னருளைத் தேடாம லின்பருண்மா
தேவாவென் பேனடைத றேரேனே—யாவாவென்
றோதாயே லுண்டோ வுளையாய்செந் தூரமரு
நாதாவிங் கஞ்சலென்பார் நன்று. (௰க)

கட்டளைக்கலித்துறை.

நன்றிது தீதிதென் றேயறி யேனை நவில்கவியென்
றின்றுமெம் வேலவன் சொல்வதை நோக்கி லிலக்கணக்கற்
றென்றுமே பொய்யா மொழிப்புல வன்கவிக் கிச்சையுற்றே
யன்றொரு வேடனுய்ச் செந்தூரான் வந்த ததிசயமே. (௰உ)

## இணைக்குறளாசிரியப்பா.

சயம்பட வேண்டிப் பயம்படு பெரியோ
ரியம்பிடு முறையே நயம்படு கவிசொற்
புலவரைப் போல நலமிலே னெனினு
மலகில்புன் சொல்லே நிலவிப மொழியாற்
செந்நெலார் பண்ணை மன்னுசெந் தூரிற்
பன்னிரு கரத்தோ டென்னையாண் டருளு
முன்னையு முன்பா லின்னருள் பெற்ற
பொன்னனை யாரா மன்னைய ரிருவர்
தம்மையும் பாடி யிம்மையார் பயனோ
டம்மையும் வீடாஞ் செம்மையார் பயனும்
பெறலா மெனுமோ ருறுதி
திருவரு ளாலே வருவது கருதி
மருமமா வாரு மரிமரு கோனே
பருவரல் போக்கு மொரு குரு பரனே
செந்தில்வா ழெங்கள் கந்தனே யென்று
குழறுமென் மொழியிங் கழகில தெனினு

மழலையார் மொழிதன் குழவிவாய் கேட்கப்
புளகித மிஞ்சி யுளமகிழ் தாயிற்
கேட்டுள மகிழ்ந்து வேட்ட திங் கருளாய்
காட்டிய மடவார் கூட்டமார் செந்தூர்
மாட்டுயர் சந்தக் கோட்டுறை வோனே. (௰௩)



## நேரிசைவெண்பா.

ஓங்காரத் துட்பொருளை யுண்பார்கட் குற்றவனு
யாங்காரத் துற்றூர்க்கில் காகாதான்—பாங்காகச்
செந்திற்கர் சேர்பவர்தஞ் சென்மவினை தீர்த்தருளுங்
கந்தனுக்கே சொல்வேன் கவி. (௰௪)

## கட்டளைக்கலித்துறை.

கவிக்குலந் தானையாய்க் கொண்டுபத் துச்சிரங் காய்ந்தவன்முன்
புவிக்குளே சென் றுதான் றேடியுங் காணுத பொன்னடியான்
செவிக்குளே வேத முதலெழுத் தோதிய சேயெனலாற்
புவிக்குட்செந் தூரனைப் பெறறவன் றேவெனப் போற்றுவனே.

### நிலமண்டிலவாசிரியப்பா.

வன்மனத் தார்க்கும் நன்மையே புரியுந்
தன்மையார் நட்பின் கின்மையா லந்தோ
கெட்டே னிறைவா துட்டர்க ளுறவா
லெட்டின மட்டுந் தட்டா து புரியு
நிட்டையும் விட்டேன் கட்டமும் பட்டே
னீடுற வோங்க நாடிய பயிருஞ்
சூடுறி னம்மா வாட லு மியல்பே
யாயினு முட.னே நேயமாய் வானந்
தாயெனப் பெய்யில் வீயுமோ சொல்லா
யன்னபாங் காகவென் னின்னறீர்த் தாளு
முன்னரு ளென்றே யெண்ணியிங் குற்றேன்
வேற்படை பண்ணலாம் வேள்படை பயின்ற
பப்பதி தனிலே யனங்கவே டானு
மென்படை பயில்வே னெனமுரா சறைந்து
வந்தவா றேய்ப்பச் சிந்தொலி செய்ய
வன்னநேர் நடையார் பின்னுவார் சடையின்
மின்னனே ரிடையிற் றுன்னுமால் கொள்ள

மற்கட மனதை வாட்டுவான் றனது
விற்படை தொடுத்து முற்பட வைத்தான்
கொல்லோ வென்னக் குளிர்புன மெங்குங்
கன்னலார் செந்தூர்க் கருணையங் கடலே. (௰௬)

நேரிசை வெண்பா.

கடன்முடிவெற் பாற்றல் கருக வயில்வளைசெண்
டிடல்வழுதிக் கேற்றதே யென்பார்—தடவரையைச்
செற்றதுனக் கேற்குமோ செந்தூரா யும்பர்கோன்
பெற்றமகட் கேக்கமுற்றோ பேசு. (௰௭)

கட்டளைக் கலித்துறை.

பேசா திருந்தவோர் மூங்கையாம் பிள்ளையும் பேசிடவே
பாசாங் குசம்புயஞ் சேர்ந்தவ டந்திடு பாலசெந்தூ
ரீசா புரிந்தாய் பிரபாச மற்றதொன் றின்றியெனைப்
பேசா திருந்திடச் செய்தருள் வந்திவண் பேணியின்றே.

# திருச்செந்தூர்

## நிலமண்டிலவாசிரியப்பா.

இன்றியே யமையா தென்றவவ் விடமே
யொன்றொரு வினையை நன்றெனச் செய்து
மன்றது தருபயன் மன்றுளார்க் கென்றே
யொன்றிய கருத்தோ டென்றுமே யுறையும்
பெரியோர்க் கென்று முரியே னாகப்
புரிவான் கருதி யருளொடு நின்றான்
வரியார் நீலக் கரிதோட் சேரும்
பெரியான் வேத வரியார் வாயா
னரியான் வானோர் பிரியாது வேண்டப்
பரிதேர் முதலா யரிமயிற் பற்றிப்
பொருதவோர் கரியு மரியுமே வீய
வேவிய வேலுடன் றாவியே யன்னை
வந்தருள் புரிந்தானஞ் செந்திலம் பதியார்
பந்தம தகற்றிடுங் கந்தவே ளானே. (பசு)

நேரிசை வெண்பா.

வேளையுன் பூச்சேன் மினுக்குக் குலுக்கேன்செவ்
வேளையெம் பாலுற்றான் பேதினியிற்—கோளேதாந்
தீமைதமக்குச் செய்தாலுஞ் செந்தூரான் றாளிடுமப்
போமைதமக்குச் செய்யும் புகழ். (உ௰)

கட்டளைக் கலித்துறை.

புகலொன்றி லாதவர் செந்தூரிற் கந்தனைப் போயிரப்ப
விகலொன்று சொல்வா ரன்பரைக் கொண்டவர்க் கீவதெவன்
நகலொன்று கங்கைகொண் டான்பெற்ற வாண்டையே நாமறிவோ
* மகலொன்று மில்லுமோ வன்குறத் தோகையு மானையுமே.

நேரிசை யாசிரியப்பா.

ஆன்குல மோம்பிய கோன்றரு மகளிர்
மான்குலத் தோமொரு வான்குல மோங்க
வருடவ ரிருவர் குரவணி மொய்ம்பின்
மருவிட விச்சை பொருந்திய தாலு

* அகல் = மனவிசாலம்.

மொருமகன் பெயரே யருமையிற் பெற்ற
பெருமையி னானு முரிமையிற் றங்கை
தருமக னெனவே வருமுறை யானு
மரிமரு கனென் றுரிமையிற் பெயர்கொண்
முருகவிவ் வுலகோர் தருவழக் கொன்றிங்
குன்வயி னிகழ்ந்த தென்வயிற் கேண்மோ
பெற்றவன் குணங்கண் முற்றுமே தாங்கு
நற்றவப் புதல்வரு மற்றவன சாயற்
சற்றுமே யின்றிப் பெற்றவண் † முன்பி
னுற்றவக் குணமே பற்றிய தனையரு
மிற்றைநா ளுண்டா மற்றிவை தம்மு
ளெக்குணம பெற்றாய் நிர்க்குணா சொல்லாய்
மாதுலன் குணமே யோதுவ னுனக்கு
பேதெனின் மான்பின் காதலிற் சென்றான்
நள்ளிருட் கானிற் றுள்ளியே போடும்
புள்ளிமான் கன்றாம் வள்ளிபின் சென்றாய்

---

† முன்பின் = தமையன் தம்பி.

நன்றுடன் மலையி னென்றுமே யுறைவான்
குன்றெலா நீயும் வென்றியே புரிவாய்
பெருமா ளெனும்பே ருரிமையாப் பெற்றுன்
பெருமா ளெனும்பே ரருமையாப் பெற்று
யரவின் பகைமீ திருமாந் துற்று
னரவின் பகைமேற் குரவார்ந் துற்றுய்
களபமார் சந்த மளவிய வழகா
ளிளமுலை மாது ருளமிவர் வேணி
கற்றையஞ் சடையனுற் பெற்றனனுழி
மற்றவ னிடமே பெற்றனை வளைநீ
யவுணனைச் செற்றோ ரணங்கை முன்கண்டா
னவுணனைச் செற்றோ ரணங்கைநீ கொண்டா
யிவ்வா றிருப்பினுங் கௌவையொன் றில்லை
யத்தனைப் போலவே பத்தர்கட் கெல்லாஞ்
சித்தமாய் வீடரு ளுத்தம குணமு
மெத்தவு முடையாய் நித்தமு மன்றோ
செவ்வாய் திறந்திவண் செப்பிடா யெந்தாய்
குங்குமச் சேற்றினைப் பொங்கிய புனலார்ந்

தங்கையாற் கழுவுங் கொங்கைமின் னார்க
ளிங்கிதங் கொஞ்சும் பங்கமி லொலிம்ப
சங்கினி லொலிக்குஞ் செந்தூர்
சங்கரன் பங்கினிற் றங்குவாண் மகனே. (உஉ)

## நேரிசைவெண்பா.

மகனென்றுன் மேற்பிரியம் வைத்ததெலாந் தாயே
மகனென்றும் பாராதே வைத்தான்—றகவின்றி
யத்தனுமே சாப * மறுமுகனே செந்தூரா
பித்தனுமே செய்தாலென் பேச்சு. (உ௩)

## கட்டளைக்கலித்துறை.

பேச்சுக்கிங் குன்னையா னூமைநீ யென்றதாற் பின்னொருவ
ரேச்சுக்குட் பட்டுநா னேமாந் திருந்தவ னென்னை மிகக்
காச்சுக்காச் சென்றிடக் கைகட்டி வாய்பொத்திக் கண்கசக்க
மூச்சுக்காட் டாதிருப் பாயோசெந் தூராரு முத்தையனே.

---

* ஊமைப்பிள்ளையாயது,

நிலமண்டில வாசிரியப்பா.

முத்தே நிரைத்த பத்தியோ டென்னச்
சுத்தமார் சொற்பொரு டத்தியே பொலியும்
புத்தகம் பலவே வித்தகர் மெச்ச
யித்தரை மீதே மெத்தவுஞ் செய்தா
ளத்திபி னருளே நித்தமும் பெற்று
முத்திவீ டுற்ற வுத்தமி வாயால்
விதிதினம் பயிலும் பதியின்வாய்ச் சொல்லா
முதுநா லெனும்பெரு சதுமறைப் பயனே
பொதியுமோர் பனுவ லிதமுறக் கேட்பான்
றுன்னுமோர் நாவன் மன்னுமோ ரமைய
முன்னியா மேய்க்குஞ் சின்னவன் போலாய்
வந்துமுன் றேன்றி விந்தையாய்ப் பேசிச்
சிந்தையிற் பலனைப் பிந்தியே கொள்வான்
முந்தையோர் பலனைச் சிந்தினு யந்தோ
வேனிந்த வகையாய் நானிலந் தன்னிற்
பித்தலாட் டகத்தை * நித்தமுஞ் செய்த

* பித்தளை ஆட்டகம் என்னும் பதங்களின் திரிபு பித்தலாடகம்

னுள்ளதைச் சொன்னாற் கள்ளனென் றன்னை
யெள்ளள வேனும் விள்ளுவர் கொல்லோ
சற்றுமே தானுங் குற்றமுன் பேரிற்
சொற்றலுந் தப்பேமற்றதும் வழிவழி
யுற்றதோர் செய்கை யிற்றைநா ளொழியா
பஞ்சவருடனே வஞ்சினங் கொண்டே
மிஞ்சினர் பலரோ டெஞ்சின ரெவருந்
துஞ்சவே தூதாய்ப் பஞ்சைபோல் வந்தே
வஞ்சகம் பொய்தா னெஞ்சுற வுரைத்து
மாதவ னெனும்பேர் தீதறக் கொண்டான்
மருமகன் றானே திருமுருகா நீ
யாதலாற் செய்கை நீதியே செந்தூர்
வேதிய ரகத்துள் விளங்கிடும் விளக்கே. (உரு)

நேரிசை வெண்பா.

விளக்கா யிருள்கற்று மேவலர்க ளாக்கை
பிளக்குமாம வானேனைப் பேணுந்—தளக்கருவி
யாகுமாஞ் செந்தூ ராறுமுகன்வே லென்பவர்பா
லேகுமோ விங்கோ ரிடர். (உசு)

## கட்டளைக் கலித்துறை.

இடர்விளைக் கின்றவை வேடளைக் கொன்றெ னிதையமதிற்
சுடர்விளக் கேற்றியஞ் ஞான விருளைத் துடைத்தெனையே
துடர்விளைக் கட்டறுப் பாயே லடியார் தொகைமிகும்நான்
விடர்விழை வுற்றிடி லென்பயன் செந்தூரில் வித்தகனே.

## நிலமண்டில வாசிரியப்பா.

வித்தைகட் கெல்லாங் கர்த்தனீ யென்றே
புத்தகஞ் சொல்லல் சத்திய மெனவே
யத்தமும் பயனு முத்தர்கட் கீவா
னிர்த்தனஞ் செய்வான் பத்தர்சொற் பனுவற்
கர்த்தமு மாவா னத்தினந் தந்த
களவியற் பொருளை யுளபடிக் கறிவான்
கழகமுற் றூர்க்கு ளெழுமொரு வாதஞ்
பேசா திருந்துநீ கூசாது தீர்த்த
வன்னா டானே தென்னா டாகு
மின்னா டெங்குஞ் சொன்னார் புலவர்
முன்னோ ரென்றிங் கின்னே கேட்டு

நின்பதந் தொழவு மின்பதந் தந்தா
யன்பிதங் கொண்டே செம்பதம் பாடின்
* முன்பதந் தருவா யென்பதுந் தேர்ந்தே
னென்னவா றேத்தி யுன்னைபான் பாடக்
கன்னலுங் கமுகுந் தென்னையில் வளருஞ்
சோதியார் மாடம் வீதியார் செந்தூர்
சீதமார் வாரி மோதியே கரையிற்
சிந்திடு முத்தோ முந்தியச் சாகரம்
வந்திடு மமுதோ கொந்தவிழ் தருவோ
சிந்தா மணியோ நந்தா விளக்கோ
வெந்தேர் வென்வேன் கந்தா வுன்னை
யக்கரை மீதிற் கொக்கரை முழக்கப்
பக்கம திருவர் கைக்கிளி தாங்க
வொயின்மின் னார்கள் குயிலிற் பாடி
மயிலென நடிக்க வயில்கைக் கொண்டே
சந்தனம் புழுகு சாந்துகஸ் தூரி
விந்தையார் களபம் விரவியே பூசி

* முன்பதம்-சாயுச்சியம்.

கொந்தலர் பிச்சி குடைமுலை வாச்சி
யிந்துள முதலா யந்தமி லாவுஞ்
சந்திக டோறுங் கந்தரந் தாங்கித்
தந்திரி மார்கள் வந்தனை புரிய
வந்தணர் முதலாய் வந்தவர்க் கெல்லாஞ்
சிந்தையிற் களிப்போ டெந்தநே ரத்துந்
தெரிசனந் தந்தே வரிசைசெய் வாரிற்
பந்தம தறுப்பான் சந்தன முதலா
யிலைநீ றளித்தே யுலைவிலா தென்றுங்
குணபா னேக்கிக் கணகண வெனவே
மணியொலி தரநன் னணிகலன் றுங்கி
மணமக னெனவே குணமுட னுறையுங்
கோலங் காட்டி ஞாலமீ தடியேன்
வேண்டுமா றெல்லா மீண்டுவந் தருளி
யென்னையாட் கொண்டு முன்னையான் பட
வுன்னுபோ தெல்லாஞ் சொன்னயங் கேட்போர்
கன்னலுங் கைத்த தென்னவுந் தூக்கின்
பொருளே தேர்வார் மருளா வண்ண

மருளே நிறைந்த பொருளே யெனவு
முறையே தந்துங் குறைதா ரெருவ
னிலையா வண்மைப் பொறையோ டருளா
யிறைபா யெங்கு நிறைபரம் பொருளே. (உஅ)

நேரிசை வெண்பா.

பொருவாகு முன்னுகப் பொற்றளியுள் ஞான
வுருவாகுஞ் செந்தூரா வுன்னைக்—குருவாகப்
பெற்றவனே ரென்றுலெம் பித்தன் மனக்கூட்ட
முற்றிறவனோர் சொல்வே னுனக்கு. (உகூ)

கட்டளைக் கலித்துறை.

உன்னுவா ரல்லாதார் காணுத செந்தூர்க்குகந்தகந்தன்
றன்னருட் டாமரை மாமலர்ப் பாதந் தமைநினைந்திங்
கின்னுனா வோடுறக் கந்துறந் தேதின மெய்த்தவட்குச்
சென்னியிற் றூண்மலர் சூட்டினன் பூத்திடத் திங்கள்தே.



 மும்மணிக்கோவை முற்றுப்பெற்றது. 